[7th February 1959

DEPUTY SPEAKER : நீங்கள் கேட்கிற கேள்விக்கும், மூலக் கேள்விக்கும் ஒன்றும் சம்பந்தமில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : இந்த சிட்டிகளை மட்டும் சுகாதார நலமற்ற இடங்கள் என்று அரசாங்கம் அறிவித்துள்ளார்கள் என்பதற்குக் காரணம் என்ன ? (அங்கத்தினர்கள் : ஸிட்டி அல்ல, காட்டுப் பிரதேசங்கள்) குறிப்பாக மேஜர் பஞ்சாயத்து, முனிசிபல் ஏரியாக்களிலும் மோசமான, சுகாதார நலமற்ற இடங்கள் இருக்கும்போது, இது போன்ற இடங்களை மாத்திரம் அறிவித்துள்ளது அந்த ஏரியாக்களை மேலும் அபிவிருத்தி செய்யவேண்டும் என்ற நோக்கத்தோடு அறிவித்துள்ளார் களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் என்ன மனதில் வைத்துக் கொண்டு கேட்கிறார்கள் என்று எனக்கு புரியவில்லை. மலேரியா, பைலேரியா உள்ள இடங்கள், இந்த இடங்கள். ஆகையால் இந்த இடங்கள் சுகாதார நலமற்ற இடங்கள் என்று பிரசுரம் செய்திருக்கிறோம். மற்ற இடங்களில் சுகாதாரக் குறைவில்லையா என்று கேட்டால், இருக்கிறது. காட்டுப் பிரதேசங்களைத் தான் குறிப்பிட்டிருக் கிறார்கள்.

SRI K. VINAYAKAM : Sir, is the Hon. Minister aware of the fact that of late there is a great invasion and rush of mosquitoes, which are responsible for the spread of diseases like filaria and malaria, into the City of Madras? If so, will the Government declare the City of Madras as unhealthy for human inhabitation?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I think this question should be addressed to my Colleague, the Health Minister and I am sure he will take necessary action.

SRI M. P. PERIASAMI : தலைவர் அவர்களே, கொல்லி மலையில் மலேரியா அதிகமாக இருக்கிறது என்று அறிவிக்கப்பட்டது. இப் போது மருந்து அடித்துக் கொண்டு வருகிறார்கள். இன்னும் எத்தனை வருஷங்களுக்கு இந்த மலேரியா இருக்கும் என்று தெரியுமா ? இன்னும் எத்தனை வருஷங்களில் மலேரியா இல்லாமல் செய்ய முடியும் என்று தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது மலேரியா முழுவதையும் தடுக்க விரிவான திட்டம் ஒன்று யோசிக்கப்பட்டு வரு கின்றது. அது அமுலுக்கு வருமானல் எல்லா இடங்களிலும் கொசுக்கள் ஒழிக்கப்பட்டு விடும். எதாவது ஒரு பகுதியில் இப்போது நடவடிக்கை எடுக்கப்படுகிற காரணத்தினுல் ஒரு பகுதியிலிருந்து இன்னொரு பகுதிக்கு அவைகள் படையெடுத்து விடுகிறது. ராஜ்யம் முழுவதையும் எடுத்துக் கொண்டு, மலேரியாவைத் தடுக்கும் திட்டம் உருவாகிக் கொண்டிருக்கிறது.

*District Gazetteers*

* 89 Q.—SRI K. RAMACHANDRAN (on behalf of Sri M. Jagannathan) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether the work of preparing District Handbooks in the place of the old District Gazetteers has been completed; and

(b) if not, the reasons for the delay?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) No, Sir.

7th February 1959]

(b) The particulars for the preparation of the Handbooks have to be collected from various Departments and a common pattern regarding the format, printing, arrangement of the matter, etc., to be adopted in all the States, were decided only in June 1958 at the State Editors' Conference. The work could not therefore be completed.

Sri R. SRINIVASA IYER : தேசம் முன்னேற்றப் பாதையில் போவதற்கு விவரங்கள், புள்ளிவிவரங்கள் தேவையாக இருப்பதால் ஜில்லா கெஜட்டீர்களில் சுதந்திரம் அடைந்ததற்கு முன்புள்ள புள்ளி விவரங்கள் கொடுக்கப்பட்டிருப்பதால், திருத்தங்களையாவது பிரசுரிக்க அரசாங்கம் முயற்சி செய்வார்களா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : அதையெல்லாம் திருத்தித் தான் இந்தப் பிரசுரம் வருகிறது. தஞ்சை ஜில்லாவைப் பொருத்த மட்டில் 1957-ம் வருஷமே பிரசுரிக்கப்பட்டு விட்டது. மதுரையைப் பொருத்த மட்டில் இன்னும் சில வாரங்களில் பிரசுரிக்கப்படும். இன்னும் அந்தமாதிரி மற்ற ஜில்லாக்களைப் பற்றியும் பிரசுரிக்கப்படும்.

Sri S. LAZAR : இதற்கு முந்திய கெஜட்டீர் எந்த ஆண்டு பிரசுரிக்கப்பட்டது ? அடுத்த கெஜட்டீர் எத்தனை நாட்களில் வெளிவரும் ? 9-20 a.m.

The Hon. Sri M. A. MANICKAVELU : ஒவ்வொரு ஜில்லாவினுடைய இந்தப் பிரசுரம் ஒவ்வொரு நிலையிலே இருக்கிறது.

The typescript of the South Arcot District Handbook has been returned from the Editor after approval. Some suggestions as to inclusion of statistical particulars in some of the chapters are being carried out. The typescript of Coimbatore District Handbook has been sent to the Editor for approval.
இம்மாதிரி ஒவ்வொரு ஜில்லாவினுடையதும் ஒவ்வொரு ஸ்டேஜிலே இருக்கிறது. இதெல்லாம் சீக்கிரம் முடிவாகிவிடும்.

Sri A. VEDARATHNAM : பல சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்கள் எல்லாம் இந்த கெஜட்டீர்களிலே காணப்படுகின்றன. ஆனால், எல்லா ஜில்லாக்களினுடைய கெஜட்டீர்களும் இப்பொழுது கிடைக்கவில்லை. எல்லா ஜில்லாக்களினுடைய கெஜட்டீர்களும் கிடைக்கும் படியாகச் செய்வதற்கு அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுத்துக்கொள்ளுமா ? அப்படியானால், அதன் விவரம் என்ன ?

The Hon. Sri M. A. MANICKAVELU : பழைய கெஜட்டீர்களையெல்லாம் இப்பொழுது மறுபடியும் பிரசுரம் பண்ணுவது அவ்வளவு நன்றாக இருக்காது. புதிதாக உள்ள அம்சங்களையெல்லாம் சேர்த்து இப்பொழுது பிரசுரம் செய்கிறோம். பழைய விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால் பழைய புத்தகத்தைப் புரட்டிப் பார்த்தால் தெரியும்.

Sri K. ANBAZHAGAN : மாவட்ட கெஜட்டீர்கள் அல்லது அரசாங்கப் பதிவு ஏடுகள் என்று சொல்லக்கூடியவைகளைப் பிரித்துப் படிக்கின்ற போது, அவை படிக்க முடியாத தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கின்றன. ஆனால், மாநில அரசாங்கத்தின் சார்பாக வெளிவருகின்றவை ஓரளவு படிக்கக் கூடிய நடையில் வெளியிடப்படுகின்றன. தமிழ் நாட்டினர் படிக்கக் கூடிய வகையில் அவற்றை எழுதி வெளியிடும்படியாக அரசாங்கம் ஆலோசனை தெரிவிப்பார்களா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் அவர்கள் சொன்னார் மாநில அரசாங்கம் பிரசுரிப்பது கொஞ்சம் தெளிவான வகையில் இருக்கிறது என்று. ஆகையால், அந்தப் பாதையிலேயே போய்க் கொண்டிருப்போம்.

[7th February 1959

SRI K. VINAYAKAM : Is it a fact that the District Gazetteers are not printed in Tamil but printed in English?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது நாம் கை புத்தகம் பிரசுரம் செய்கிறோம். கெஜட்டீர்களெல்லாம் ஆங்கிலேயர் காலத்திலே ஆங்கில மொழியிலே பிரசுரிக்கப்பட்டுவந்தன.

*Art silk yarn*

* 90 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government have recommended to the Central Government to issue import licences for Art silk yarn only to actual weavers or master-weavers; and

(*b*) if so, what should be the basis according to this Government, on which such licences are to be issued?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Recommendations have been made with regard to both actual weavers and master-weavers.

(*b*) The basis should be the reasonable requirements as assessed with reference to the fabric normally produced, its specification, capacity for production per loom and the normal days of working in a month.

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த நார்ப்பட்டு நூல் விநியோகம், தொழிலுக்கே சம்பந்தப்படாத ஆட்களுக்கு இருக்கிறதா ? இறக்குமதி லைசென்ஸ் கொடுக்கப்பட்டிருப்பவர்கள் நம் மாகாணத்திலுள்ளவர்களாக இருக்கிறார்களா ? வெளி மாகாணத்தில் உள்ளவர்களுக்கும் இந்த லைசென்ஸ் கொடுக்கப்பட்டுள்ளதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : எந்த ஒரு பொருளில் பற்றுக்குறை ஏற்பட்டாலும், உடனே அதை உபயோகிக்கின்றவர்களும் உபயோகிக்காதவர்களும் அதை வாங்குவதற்கு முயற்சி செய்கின்றார்கள். இதில், உபயோகிக்காதவர்கள் வாங்கவே இல்லை என்று சர்க்காரால் சொல்ல முடியாது. ஏனென்றால், அவர்கள் இதற்கு முன்னால் உபயோகித்ததாக கணக்கு காட்டினால் அவர்களுக்கும் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆகையால், மற்ற மாகாணங்களில் இருக்கின்றவர்களுக்கு இங்கு கொடுத்திருக்கிறதா, இல்லையா என்று சொல்வதற்கில்லை.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்த நார்ப்பட்டு நூல் வரவழைப்பதற்கான லைசென்ஸ் மாஸ்டர் வீவர்களுக்கும் தனிப்பட்ட நெசவாளிகளுக்கும் கொடுக்கவேண்டுமென்று நம்முடைய அரசாங்கம் சிபார்சு செய்திருந்தாலும், அவர்களுக்கு தேவைக்குத் தகுந்த அளவு கிடைக்கவில்லை என்ற புகார் இருக்கிறது. அதனால், அவர்கள் வெளி மார்க்கட்டிலே அதிகப் பணம் கொடுத்து வாங்க வேண்டிய நிலைமை இருக்கிறது. அந்தக் குறையை நிவர்த்திப்பதற்கு அரசாங்கம் முயற்சி செய்வார்களா ? என்ன தேவை என்று குறிப்பிடுகிறார்களோ, அந்த அளவு அவர்களுக்கு இறக்குமதி செய்ய வசதி செய்து கொடுக்க அரசாங்கம் முன் வருவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பற்றுக்குறை இருப்பதால் தான் சர்க்காரிலே விநியோகம் செய்கின்றார்கள். வேண்டிய அளவு ஆர்ட் ஸில்க் இருக்குமானால்,, இன்றைக்கு சர்க்கார் விநியோகிப்பதற்கான ஏற்பாடுகள் செய்வதற்கு அவசியம் இல்லை. இது வெளி நாடுகளிலிருந்து வரவேண்டியிருப்பதால், அதற்கு அன்னிய நாட்டுச் செலாவணி